# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

• Volume : 1 • Issue : 8 | தமிழ் மாத இதழ் | • October 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 8 | • அக்டோபர் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-


## விருப்பமும் அறிவும்



பலவற்றை காட்டுவதுதான் மனதின் வேலை. அவற்றுள் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்வதுதான் அறிவின் வேலை. நம் செயலுக்கு முதன்மையானது அறிவுதான். அறிவை நம்பித்தான் செயலில் இறங்கவேண்டுமே தவிர விருப்பங்களை நம்பியல்ல.

- ஸ்ரீ பகவத்



விரும்பியது கிடைத்தால் மகிழ்ச்சி; விரும்பியது கிடைக்காவிடில் வருத்தம்.

மனம் போல் வாழ்வு - இப்படிக் கூறப்படுகிறது.

அறிவு என்பதென்ன? அறிவுக்கே இங்கு வேலை இல்லையா?

அறிவு என்பது வரட்டுத்தனமானதா?

ஒரு வேலையைச் செய்திடுமாறு அறிவு நமக்குக் கூறினாலும்

அதைச் செய்வதற்கான விருப்பம் நமக்கு இல்லாத பட்சத்தில் அந்த வேலையை நாம் ஒழுங்காகச் செய்திட முடியுமா?

ஒரு மாணவனை எடுத்துக் கொள்வோம். அவனுக்கு டாக்டர் ஆக வேண்டும் என்பது ஆசை. ஆனால் அவனுடைய தந்தைக்கு அவனை ஒரு பொறியாளராக ஆக்க வேண்டும் என்று ஆசை.

இப்போது அந்த மாணவன் என்ன செய்வது? அவன் தனது ஆசையை நிறைவேற்றுவதா அல்லது தந்தையின் ஆசையை நிறைவேற்றுவதா?

படிப்பது மாணவன்; தந்தையல்ல. படித்து தொழில் புரியப்போவது மாணவன்; தந்தையல்ல. இங்கு எவருடைய விருப்பத்தைச் செயல்படுத்தினால் சரியாக வரும்?

எனக்கு காபி சாப்பிடுவது பிடிக்கும். உங்களுக்கு ஐஸ்கிரீம் சாப்பிடுவது பிடிக்கும்.

எனது விருப்பத்தை நிறைவேற்ற நீங்கள் காபி சாப்பிட வேண்டுமா? உங்கள் விருப்பத்தை நிறைவேற்ற நான் ஐஸ்கிரீம் சாப்பிட வேண்டுமா?

விருப்பத்தோடு செயல்பட்டால் தானே எதுவும் நன்றாக இருக்கும்? நாம் எப்படிச் செயல்படவேண்டும்?

நமது விருப்பங்களை எவ்வாறு செயல்படுத்த வேண்டும்?

நம் அறிவை நாம் எவ்வாறு செயல்படுத்த வேண்டும்?

இரண்டுக்கும் என்ன தொடர்பு?

விருப்பங்கள் அறிவை இயக்குகின்றனவா அல்லது அறிவுதான் விருப்பங்களை இயக்கி விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்கின்றனவா?

- விருப்பம் எவ்வாறு செயல்படுகிறது?

விருப்பங்களை மனதோடு ஒப்பிட்டுப்பேசுவது வழக்கம். நம் விருப்பங்களாகச் செயல்படுவது நம் மனதே.

நம்முடைய அறிவு என்பது நம் புத்தியைக் குறிக்கிறது. மனதோடு அறிவு ஒத்துழைக்க வேண்டுமா அல்லது அறிவோடு மனது ஒத்துழைக்க வேண்டுமா?

ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம்.

மோட்டார் சைக்கிள் வைத்திருக்கும் நீங்கள் கார் ஒன்றை வாங்க முடிவு செய்கிறீர்கள். ரோட்டில் ஓடிக்கொண்டிருக்கும் கார்களையெல்லாம் பார்க்கிறீர்கள். ஒரு கார் உங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

இப்போது உங்கள் அறிவின் வேலை என்ன?

உங்களது அறிவும் உங்கள் விருப்பத்துக்கு ஒத்துழைப்பு கொடுக்கிறது.

கார் வாங்குவதற்கான பணத்தை எவ்வாறு தயார் செய்வது என உங்கள் ஆசையை - விருப்பத்தை நிறைவேற்றும் வேலையில் உங்கள் அறிவு ஈடுபடுகிறது.

உங்கள் அறிவின் துணையோடு நீங்கள் உங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறீர்கள். நீங்கள் விருப்பப்பட்ட கார் உங்களுக்குக் கிடைத்து விடுகிறது. நீங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைகிறீர்கள்.

இப்படி நம் அறிவு நமது விருப்பத்தை நிறைவேற்ற ஒத்துழையாமல் நாம் கடைசி வரைக்கும் பைக்குடனேயே இருந்து கொள்ளவேண்டும் என்று கூறினால் என்ன ஆகும்?

நாம் வெறுத்துப் போய் விடுவோம். "என்னடா வாழ்க்கை" என்ற சலிப்பு ஏற்பட்டுவிடும். கார் வைத்திருப்பவர்களைப் பார்த்தால் ஒருவித மன ஏக்கம் வந்துவிடும்.

இப்படிதான் நாம் மருத்துவக் கல்வி பெற விரும்புகிறோம். நம் தந்தையோ நாம் என்ஜினியரிங் எடுத்துப் படிப்பதையே விரும்புகிறார். அவருடைய அறிவுரைகளைக் கேட்க நாம் தயாராக இல்லை.

நாம் விரும்பியபடியே மருத்துவக் கல்லூரியில் நமக்கு இடம் கிடைக்கிறது. மகிழ்ச்சியுடன் கல்லூரியில் சேர்ந்து மகிழ்ச்சியுடன் பாடங்களைப் படிக்கிறோம். நம் விருப்பத்துடன் சேர்ந்து நம் அறிவும் ஒத்துழைக்கிறது.

இப்படிதான் நாம் ஒரு கார் வாங்க ஆசைப்பட்டோம். நம் அறிவின் ஒத்துழைப்புடன் நாம் விரும்பிய காரை வாங்கினோம்.

இவ்வளவு தானா? இனிமேல் தான் பிரச்சினையே ஆரம்பமாகப் போகிறது. என்ன பிரச்சினை?

நாம் விரும்பிய காரை வாங்கியது சரி இல்லையா?

நாம் விரும்பியபடி மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தது சரி இல்லையா?

எல்லாமே சரிதான். ஆனால் அடுத்ததாக நடப்பதுதான் சரியில்லை.

நாம் விரும்பிய காரில் விரும்பியவாறு பயணம் செய்கிறோம். இரண்டு மாதங்களுக்குப் பிறகு ரோட்டில் இதை விடவும் அழகானதொரு காரை - இதே விலையில் உள்ளதை பார்க்கிறோம்.

"அவசரப்பட்டு வாங்கி விட்டோமே, கொஞ்சம் பொறுத்திருந்தால் இந்தக் காரை வாங்கியிருக்கலாமே" - இப்படியொரு எண்ணம் மனதில் உதிக்கின்றது.

இதுபோல் மருத்துவக்கல்லூரியில் சேர்ந்து ஒரு வருடம் மகிழ்ச்சியோடு இருக்கிறோம். இரண்டாவது வருடத்துக்குள் அடியெடுத்து வைக்கும் போது தான் இன்னுமொரு சிந்தனை ஏற்படுகின்றது.

"தந்தை கூறியது போல் என்ஜினியரிங் கல்லூரியில் சேர்ந்திருக்கலாமோ? மருத்துவத் தொழிலுக்கு, படித்து முடித்தவுடன் அதிக வாய்ப்பு இருப்பதாக தெரியவில்லையே. என்ஜினியர்கள் படித்து முடித்தவுடன் நல்ல ஊதியம் வாங்குகிறார்களே. நல்ல ஓய்வு கூட கிடைக்கிறது. அவசரப்பட்டு மருத்துவக்கல்லூரியில் சேர்ந்து விட்டோமோ?"

-இப்படி எண்ணத் துவங்கி விடுகிறோம்.

இந்த நிலை எல்லா இடங்களிலும் காணப்படுகின்றது.

எவருமே தான் பார்க்கும் தொழிலில் நிறைவடைவதாக இல்லை.

எனக்குத் தெரிந்த வழக்கறிஞர்கள் சிலர் அரசுத்தேர்வு எழுதி நீதிபதிகளாகவும், உயர் அதிகாரிகளாகவும் வந்து விடுகிறார்கள்.

அவர்களுடைய இந்த வெற்றியும், உயர்வும் மற்றவர்களால் பொறாமைபடும் அளவுக்கு உள்ளன.

ஆனால் அவ்வாறு வெற்றி பெற்றவர்கள் விரைவிலேயே துவண்டு விடுகிறார்கள்.

"வழக்கறிஞராக இருக்கும் போது எவ்வளவு சுதந்திரமாக இருந்தேன். இப்போது எனக்கு ஒரே நெருக்கடி; மேலதிகாரிகளாலும், மற்ற வழக்கறிஞர்களாலும் ஒரே நெருக்கடி. நிம்மதியாகப் பணிபுரிய முடியவில்லை. மீண்டும் வழக்கறிஞராக வந்து விடலாமோ என எண்ணுகிறேன்".

- இப்படி அவர்கள் கூற ஆரம்பித்து விடுகிறார்கள்.

இவர்களுக்குள் என்ன நடக்கின்றது?

அவர்கள் விரும்பித்தானே இந்தப் பணியை மேற்கொண்டார்கள்?

பிறகு ஏன் இப்படி நடந்து கொள்கிறார்கள்?

இவர்களுடைய விருப்பத்தை இவர்களுடைய அறிவு ஏற்றுக்கொள்ளவில்லையா?

நம் விருப்பங்களை முதலில் ஏற்றுக்கொண்ட நம் அறிவானது

பிறகு அதிலிருந்து விலகிக் கொண்டுள்ளதா?

- தனது ஆதரவை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டதா?

நம்முடைய அறிவு ஏன் இவ்வாறு நடந்து கொள்கிறது?

உண்மையில் நமது அறிவில் குறை கிடையாது. அறிவு தனது ஆதரவை வாபஸ் பெறவில்லை.

பிறகு என்னதான் நடக்கிறது?

பிரச்சினை நம் அறிவில் கிடையாது.

பிரச்சினை இருப்பது நம் விருப்பத்தில் தான்.

- நம் மனதில் தான்.

விருப்பத்தில் எப்படி பிரச்சினை இருக்க முடியும்? நம் விருப்பப் படிதானே கார் வாங்கினோம்? நம் விருப்பப்படி தானே மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தோம்? நம் விருப்பப்படி தானே நீதிபதியாகவோ அதிகாரியாகவோ பதவியேற்றோம்?

பிறகு நம் விருப்பங்கள் எப்படி பிரச்சினையாக இருக்க முடியும்?

இதுதான் விருப்பங்களின் இயல்பு.

- இதுதான் மனதின் இயல்பு

நம் விருப்பங்கள் அனைத்தும் மனதைச் சார்ந்தவை.

நம் அறிவு என்பது தான் நம் புத்தியாகும்.

மனம் ஒரு குரங்கு என நாம் கூறக்கேட்டதில்லையா?

மனம் எப்போதும் தாவிக்கொண்டே இருக்கும். அதுதான் அது இயல்பு. நமது விருப்பங்களை ஒரே இடத்தில் நிறுத்தி வைக்கமுடியாது.

பல இடங்களுக்கும் தாவிச்செல்லும் வகையிலேயே அது படைக்கப்பட்டுள்ளது. அதனுடைய பணியை அது ஒழுங்காகவே செய்து வருகிறது. மனதினுடைய இயக்கம் வேறு; அறிவு என்னும் புத்தியின் இயக்கம் வேறு.

நாம் ஓர் அரசுப் பணியில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். தொடர்ந்து நான்கு நாட்கள் அரசு விடுமுறை அறிவித்துள்ளது.

நாம் என்ன செய்வோம்?

சுற்றுலா செல்லலாம்; பாக்கியாக வைத்திருக்கும் நமது சொந்த வேலையை முடித்து விடலாம்; வெகு நாட்களாக அழைத்துக்கொண்டிருக்கும் நண்பர் வீட்டுக்குச் செல்லலாம்; வேலை வேலை என்று அலைந்து கொண்டிருந்த நாம் நாலு நாட்கள் நிம்மதியாக வீட்டில் தங்கி ஓய்வு எடுக்கலாம்.

- இப்படி பலவிதமான விருப்பங்களை எடுத்துக்கூறும் பணியைச் செய்வதுதான் நம் மனது.

அவை அப்படி பலவற்றைக் கூறாவிட்டால் நாம் அவற்றை ஆராய்ந்து அவற்றுள் சிறந்ததைத் தேர்வு செய்ய முடியாது.

பலவற்றைக் காட்டுவதுதான் மனதின் வேலை. அவற்றுள் ஏதாவது ஒன்றைத் தேர்வு செய்வதுதான் அறிவின் வேலை. நம் மனது இப்படிதான் செயல்படும். இதுதான் அதன் இயல்பு.

"நீ இப்படிப் பலவற்றையும் காட்டக்கூடாது; ஏதாவது ஒன்றை மட்டுந்தான் காட்டவேண்டும்" - என்று நாம் நம் மனதுக்குக் கட்டளை போட முடியாது.

அப்படி அது பலவற்றைக் காட்டாவிட்டால், நாம் தேர்வு செய்வதும் சாத்தியமல்ல. அது அதன் வேலையை சரியாகத்தான் செய்கிறது.

அப்படியானால் நம் பிரச்சினைதான் என்ன?

மனது அலைபாயத்தான் செய்யும்; அது அலைபாய்வதுதான் சரி. விருப்பங்கள் மாறத்தான் செய்யும்; அது மாறிக்கொண்டிருப்பதுதான் சரி.

அப்படியானால் பிரச்சினை எங்கே இருக்கிறது?

விருப்பங்கள் மாறுவது பிரச்சினை இல்லாவிட்டால்

- பிரச்சினை எங்கேதான் உள்ளது?

நம் அறிவில் தான் பிரச்சினை உள்ளது; நம் புத்தியில் தான் பிரச்சினை உள்ளது. மனம் ஒரு குரங்காக இருந்து தாவிக் கொண்டிருக்கலாம்.

- குற்றமில்லை.

நம் அறிவும் குரங்காக மாறி நம் விருப்பங்களோடு சேர்ந்து இப்படித் தாவிக் கொண்டிருந்தால்

- அது சரியன்று.

- அதுதான் குற்றமாகும்.

அப்படியானால், நாம் விரும்பிய காரை வாங்கக் கூடாதா? விரும்பிய பாடத்தை எடுத்து படிக்கக் கூடாதா? விரும்பிய வேலையில் சேரக் கூடாதா?

நம் விருப்பத்துக்கு ஏற்றவாறு நாம் நம் வாழ்வை அமைத்துக் கொள்ளலாம். தவறு கிடையாது.

ஆனால் விருப்பங்களை விடவும் அறிவு தான் முக்கியத்துவம் உடையது. ஏனெனில் மனம் என்பது மாறிக்கொண்டே இருக்கும்; விருப்பம் என்பது மாறிக்கொண்டே இருக்கும்.

நம் செயலுக்கு முதன்மையானது அறிவுதான். அறிவை நம்பிதான் செயலில் இறங்க வேண்டுமே தவிர, விருப்பங்களை நம்பியன்று.

அறிவு என்று கூறுவதால் அது நம் விருப்பங்களுக்கெல்லாம் வேறான ஏதோ ஒன்று அல்ல.

நமது விருப்பங்களைத் தேர்வு செய்வது தான் அது. அங்கீகரிக்கப்பட்ட விருப்பத்தையே அறிவு என்று கூறுகிறோம். ஆனால் ஏதோ ஒரு முடிவுக்கு வந்து ஒன்றைத் தேர்ந்தெடுத்து விடுகிறோம்.

மீண்டும் மீண்டும் அலைபாய்ந்து கொண்டிருப்பதில்லை. விருப்பத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்ட அறிவானது, மற்ற விருப்பங்களைப் புறக்கணிக்கவும் தெரிந்து கொள்கிறது.

ஓர் உதாரணம்.

ஊருக்கு வெளியே தனி வீட்டில் குடியிருக்கும் எனது வீட்டுக்கு நீங்கள் இரவு நேரத்தில் வருகிறீர்கள். நீங்கள் வரும்போது நான் வெளியே செல்வதற்காக வீட்டை வெளிப்பக்கமாகப் பூட்டிக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் வந்ததும் உங்களுக்காக வீட்டைத் திறந்து உங்களுக்கென ஒரு தனி படுக்கை அறையைக் காட்டுகிறேன். நான் திரும்பி வருவதற்கு தாமதமாகி விடலாம்.

அதனால் உங்களை ஓய்வெடுக்கும்படி கூறுகிறேன். உங்களுக்கும் பயணக் களைப்பு. ஓய்வு தான் உங்களுக்கும் தேவை. வீட்டை வெளிப்பக்கமாகப் பூட்டி சாவியை எடுத்துக் கொள்ளுமாறு கூறுகிறீர்கள். நான் தாமதமாகத் திரும்பி வந்தாலும் நானாக பூட்டைத் திறந்து வீட்டுக்குள் வந்து விடலாம்.

எனக்கும் அது சரியாகத் தெரிந்ததால் வீட்டை வெளிப்பக்கமாகப் பூட்டி விட்டு சாவியுடன் வெளியே சென்று விடுகிறேன்.

இப்போது நீங்கள் மட்டுமே வீட்டில் தனியாக இருக்கிறீர்கள். நான் திரும்ப வரும் போது கதவைத் திறக்கும் வேலைகூட உங்களுக்குக் கிடையாது.

படுத்து ஓய்வெடுக்கலாம் என முடிவு செய்து படுக்கை அறையினுள் செல்கிறீர்கள். உங்கள் படுக்கையின் மீது ஆறடி நீளமுள்ள கரிய நிற நாகப் பாம்பொன்று படத்தைத் தூக்கிக் கொண்டு எழுந்து நிற்கிறது. உங்களைக் கண்டதும் சீறுகிறது.

இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்?

வீடு மட்டும் வெளியே பூட்டாமல் இருந்திருந்தால் நீங்கள் செய்யும் முதல் வேலை வீட்டை விட்டுத் தப்பி ஓடி விடுவதுதான்.

ஆனால் வீடு வெளியே பூட்டப்பட்டுள்ளது. உங்களால் தப்பி ஓட முடியாது. நீங்கள் வீட்டுக்குள் தான் இருந்தாக வேண்டும். பாம்பை எதிர்த்து சண்டையிடும் அளவுக்கு உங்களுக்கு தைரியம் கிடையாது. அதனுடன் நீங்கள் சண்டையிடத் துணியாவிட்டாலும் அதனிடமிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளலாமல்லவா?

உங்களை நீங்கள் காப்பாற்றி தான் ஆகவேண்டும்.

பாம்பை எவ்வாறு எதிர்கொள்வது?

அதனிடமிருந்து எப்படி நம்மை காத்துக்கொள்வது?

வீட்டுக் கதவு மட்டும் திறந்திருக்குமேயானால்,

பாம்பை எப்படி அணுகுவது என்ற கேள்விக்கே இடமில்லை. இந்த நிலையில் நாம் இருப்போமானால், "நீங்களும் வேண்டாம், உங்கள் வீடும் வேண்டாம்" என வீட்டை விட்டே தப்பியோடி இருப்போம்.

தப்பியோட வசதியில்லை என்ற நிலையில் தான்

பாம்பை எதிர்கொள்ளும் நிலைக்கு நாம் தள்ளப்பட்டுள்ளோம். குறைந்தபட்சம் பாம்பிடமிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது.

இப்போது நமது கவனம் முழுவதும் பாம்பின் மீதுதான் உள்ளது. அது என்ன செய்கிறது, எவ்வாறு செயல்படுகிறது என அதன் ஒவ்வொரு அசைவையும் கவனிக்க ஆரம்பிக்கிறோம்.

கதவு மட்டும் திறந்திருக்குமேயானால், பாம்பின் அசைவுகளையெல்லாம் இப்படி நாம் கவனித்துக் கொண்டிருப்போமா?

அதைத் தவிர வேறு வழியே இல்லை என்ற நிலையில்தான் அதனுடைய அசைவுகளை நாம் கவனிக்கிறோம்.

அப்போது தான் ஓர் உண்மை நமக்குப் புரிகிறது. - பாம்பைக் கண்டு நாம் எப்படிப் பயந்துள்ளோமோ அப்படி தான் பாம்பும் நம்மைக் கண்டு பயந்துள்ளது என்று.

பாம்பு நமக்கு தீங்கு செய்து விடுமோ என நாம் பாம்புக்குப் பயப்படுகிறோம்.

நாம் அதற்கு ஏதாவது தீங்கு செய்து விடுவோமோ என பாம்பு நம்மைக் கண்டு பயப்படுகிறது. பாம்புக்கு எந்த தொந்தரவும் செய்யாமல் அமைதியாக அதனை கவனிக்கிறோம்.

வாசலைத் திறந்தால் தான் நம்மால் வெளியேற முடியும். ஆனால் அந்த அவசியம் பாம்புக்குக் கிடையாது.

அந்தப் பாம்பு ஜன்னல் கம்பிகளின் வழியாக வீட்டை விட்டுப் போய் விடுகிறது.

நமது அறிவானது விருப்பங்களின் பின்னால் ஓடிக்கொண்டிருக்குமானால் அது செயல்களிலிருந்தும், பொறுப்புக்களிலிருந்தும் தப்பி ஓடுவதே. தப்பி ஓடும் மனநிலையும் - விருப்பங்களின் பின்னால் ஓடும் மனநிலையும் தவறு எனப் புரிந்து கொள்ளும் போது மட்டுமே, நாம் தப்பி ஓடுதலை விட்டுவிட்டு செயல்களை எப்படி அணுகுவது என நம் பார்வையை

செயல்களின் மீது திருப்பி செயல்களை சரியான முறையில் எதிர்கொள்கிறோம்.

நம் அறிவை பயன்படுத்தி நாம் நமது செயல்களில் நம் கவனத்தைத் திருப்பும் போதுதான் ஒரு செயலை எவ்வாறு செய்ய வேண்டும் என்ற தெளிவு நமக்குக் கிடைக்கும்.

இந்நிலையில் நம் மனமும், விருப்பங்களும் நம் அறிவோடு சேர்ந்து ஒத்துழைக்க ஆரம்பிக்கின்றன.

மனதைப் பின்பற்றி அறிவு செல்லும்போது அறிவும் பலமற்றுப் போய்விடுகின்றது.

மனமும் விருப்பங்களும் அறிவைப் பின்பற்றிச் செல்லும்போது இரண்டுமே பலமடைந்து செயல்களில் வெற்றியையும் விருப்பத்துக்குரிய சூழ்நிலையையும் ஏற்படுத்துகின்றன. ★

## பாதையில் மலர்ந்த மலர்

## மன நோய்க்கு மருந்து

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வாழும் காலத்தில் நாம் வாழ்வதற்கு நிறைய புண்ணியம் செய்திருக்க வேண்டும். அதுபோல் ஐயாவின் கருத்துகளைப் புரிய வைத்த ஆண்டவனுக்கு நன்றி கூறுகிறேன்.

### புரிதல்

இங்கு குருவை நேரில் சந்திக்க வேண்டியது இல்லை. எந்தப் பயிற்சியும் செய்ய வேண்டியது இல்லை. வேறு எந்த ஆன்மிக முயற்சியும் செய்ய வேண்டியது இல்லை. குரு காணிக்கை கொடுக்க வேண்டியது இல்லை. ஒரு புத்தகத்தில் ஐயா அவர்களுடைய கருத்துகள் இருக்கும், அதைப் படித்து கருத்துகளைப் புரிந்து கொண்டால் போதும், நீயும் ஒரு ஞானி. "ஏதோ புரிந்து கொண்டால் போதும்; ஞானியாகி விடலாம்" என்பதை நம்பமுடிய வில்லை, அப்படி தானே? ஆனால் அதுதான் உண்மை. நம்முடைய அனைத்து துயரங்களிலிருந்தும் விடுதலை அடையலாம்.

### கடவுள்

என் மனதில் புரிதலுக்கு முன் இருந்த கருத்து, "எல்லாம் கடவுள் செயல்" என்று கூறுகிறார்களே அப்படி என்றால் தீமைகள் நடப்பதற்கும் கடவுள் தானே காரணம். "அவன் ஆட்டி வைக்கிறான் நாம் ஆடுகிறோம்" என்றால் ஒருவனை கொலை செய்வதும் அவன் செயல் தானே? இதற்கு மனிதன் எப்படி பாவி ஆக முடியும்? கொலை செய்வது மனிதனாக இருந்தாலும் அந்த உணர்வு அவனுக்கு எப்படி வந்தது? "ஜாதகத்தில் இவன் இவன் இப்படித் தான் இருப்பான், இப்படி தான் செயல்படுவான் என்று கணித்துக் கூறப்படுகிறது. அதாவது, ஒரு மனிதன் உருவாகும் போது அவன் தலை எழுத்தையும் இறைவன் உருவாக்கி விடுவான். "அப்படி இருக்கையில் மனிதன் எப்படி பாவியாக முடியும்?" என்று என் மனதில் தோன்றும். அடுத்தவர்களிடம் இப்படி விவாதிப்பேன். இப்படி இந்த கேள்விக்கு "ஆகாமிய கர்மா" என்ற நூல் மூலம் ஐயா தெளிவுபடுத்தினார்.

### ஞானம்

இறைவனை வணங்கினாலும் கிடைக்காது, யோகா, தியானம் பயிற்சி முயற்சி செய்தாலும் கிடைக்காது. பகவத் ஐயா அவர்களுடைய கருத்துகளைப் புரிந்து கொண்டால் மட்டுமே மெய்ஞானம் கிடைக்கும்.

### மன நோய்

நம் எதிரிக்குக் கூட வரக்கூடாத நோய் மன நோய். மற்ற நோய்கள் வந்தால் அயர்ந்து தூங்கும் போதாவது நிம்மதி இருக்கும். இந்த மன நோய் உள்ளவர்களுக்கு தூக்கத்திலும் நிம்மதி கிடையாது. அப்போதும் சித்திரவதைதான். அப்படிப்பட்ட மன நோயிலிருந்து விடுதலை கிடைத்ததற்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுக்கு நன்றி. எனக்கு ஏற்பட்ட சந்தேகங்களுக்கு அவ்வப்போது பேசி தெளிய வைத்த நண்பர் சரவணன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

"பயமும் - விடுதலையும்" P. வெங்கட்ராமன்,
மறைமலை நகர், சென்னை. செல் : 99629-00357

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

முக்தி என்ற விடுதலையை அடைவதற்கான மார்க்கங்களிலேயே இதுவரை மிகக் கடினமானதாக கருதப்பட்டது ஞானமார்க்கம்.

நமது பகவத் ஐயா அவர்களின் 40 ஆண்டு கால தேடுதலின் பயனாக தற்போது அது மிகவும் எளிமையாக்கப் பட்டுவிட்டது என்று கூறுகிறோம்.

இதுவரை கடினமானதாக இருந்த ஒன்று தற்போது எளிமையாகி விட்டதா?

ஞானம் என்பது மனதின் இயக்க உண்மையைத் தெரிந்து கொள்வது. உண்மை என்பது இறந்த காலத்தில் நிகழ்ந்த ஒன்றாகவோ, எதிர்காலத்தில் அடையப்படும் ஒன்றாகவோ எப்போதும் இருக்கப் போவதில்லை. உண்மை என்பது நிகழ்காலத்தில், இப்பொழுதே, இக்கணத்திலேயே வெளிப்படையாகவே நிகழ்ந்து கொண்டிருக்க கூடிய ஒன்று.

பிறகு ஏன் இதுவரை அதைப் புரிந்து கொள்வதற்கு கடினமான ஒன்றாக இருந்து வந்தது?

உண்மை என்பது எப்பொழுதும் எளிமையானது தான். வெளிப்படையானது தான். இது வரை நாம் அதை எளிமையாக அணுகாததாலும் சரியான அணுகுமுறை கிடைக்காததாலும் அதைத் தவற விட்டிருக்கிறோம்.

ஞானம் என்றால் என்ன என்று இதுவரை பலரும் பலவாறாக கற்பிதம் செய்து நமக்கு சொல்லி வைத்துவிட்டுச் சென்று விட்டார்கள். அந்தக் கற்பிதமே உண்மையை அடைவதற்குத் தடையாக இருந்திருக்கிறது.

கடினமானதாகக் கருதப்படும் ஒன்றையும் நாம் சரியான கோணத்தில் அணுகும்போது அது எளிமையானதாகி விடுகிறது. எளிமையான ஒன்றையும் சரியான கோணத்தில் அணுகவில்லை என்றால் அது கடினமானதாகத் தோன்றுகிறது.

ஞானம் என்னும் மனத்தின் இயக்க உண்மையை, பகவத் ஐயா அவர்கள் சரியான கோணத்தில் அணுகிக் கண்டறிந்து எடுத்துரைத்ததால் தற்போது நம்மாலும் எளிமையாகப் புரிந்துகொள்ளமுடிகிறது.

ஆன்மிகத்தில் ஆரம்ப சாதகர்களாக இருப்பவர்களாலும் கூட இந்த ஞானத்தெளிவை எளிதாக அடைய முடிகிறது.

இருப்பினும் ஆன்மிகத்தில் தீவிர பயிற்சி முயற்சிகளை மேற்கொண்டவர்களாலும், பல ஆன்மிக தத்துவங்களைக் கற்ற பண்டிதர்களாலும் இந்த உண்மைத் தெளிவை அடைவதற்கு அவர்கள் சற்று சிரமப்படுவதாகவே தெரிகிறது.

சாதாரண ஆரம்ப சாதகர்களால் புரிந்து கொள்ளக்கூடிய உண்மை, ஏன் மெத்தப் படித்த பண்டிதர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை?

ஏனெனில் அவர்கள் இதுவரை ஞானத்தைப் பற்றித் தெரிந்துவைத்திருக்கும் கருத்துகளும் தத்துவங்களுமே ஞானம் என்னும் எளிமையான உண்மையைப் புரிந்துகொள்வதற்குத் தடையாக இருந்திருக்கிறது.

ஞானத்தைப் பற்றிய பகவத் ஐயாவின் அணுகுமுறையானது இதுவரை எவரும் அணுகாதது, புதுமையானது, சரியானது.

எந்த ஒரு புதிய விஷயத்தைத் தெரிந்துகொள்ளும்போதும் நமது அறிவானது ஏற்கனவே நாம் இதுவரை சேகரித்து வைத்திருக்கும் கருத்துகளோடும் தத்துவங்களோடும் ஒப்பிட்டுப் பார்த்தே புரிந்துகொள்ளும்.

இதன் காரணமாகவே மெத்த படித்தவர்களுக்கு அவர்கள் கற்ற தத்துவங்களும் கருத்துகளுமே இந்த எளிமையை புரிந்து கொள்வதற்குத் தடையாக இருக்கின்றன.

அவர்கள் இதைப் புரிந்துகொண்டாலும்கூட அத்தோடு அதை முடித்துக்கொள்வதில்லை. இதுதான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய சரியான புரிதல் என்று உறுதிப்படுத்துவதற்கு முன்பாகவே அவர்கள் கற்ற கடுமையான தத்துவங்களோடும் கற்பிதங்களோடும் ஒப்பிட்டு இந்தப் புரிதலைத் தவற விட்டு மீண்டும் தேட ஆரம்பித்து விடுகிறார்கள்.

இதனால் தான் பகவத் ஐயா அவர்கள், இந்த ஞானப் புரிதலை திறந்த மனத்துடன் அணுகுங்கள் என்று கூறுகிறார்.

பகவத் ஐயா அவர்கள், ஞானம் என்னும் ஓர் உயர்ந்த மரத்தின் வித்தை கொடுத்திருக்கிறார். நாம் அந்த வித்தினை வித்திட்டு நீர் ஊற்றி, ஓரளவிற்கு உயரம் செல்லும் வரை, மிகுந்த கவனத்துடன் பாதுகாக்க வேண்டும். அதன்பிறகு அதன் வளர்ச்சியை அது பார்த்துக்கொள்ளும். அதுவரை அதை கவனமாக பாதுகாக்கவில்லை என்றால் நாம் வளர்க்கும் ஆடுமாடுகளே (நாம் தெரிந்துவைத்திருக்கும் கருத்துகளும், தத்துவங்களும்) அதன் இலைதழைகளையெல்லாம் தின்று விடும்.

அதுபோல் நாம் புரிந்து கொள்ளவேண்டிய புரிதலை நன்றாகப் புரிந்துகொண்டு அதை உறுதிபடுத்தும்வரை, நாம் இதுவரை தெரிந்து வைத்திருக்கும் தத்துவங்களையும் "அவர் கூறினார், இவர் கூறினார்" என சேர்த்து வைத்திருக்கும் அனைத்துக் கருத்துகளையும் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு இந்த உண்மையை நம் அறிவை மட்டும் கொண்டு ஆய்ந்து புரிந்துகொள்ள வேண்டும். இதுதான் நாம் புரிந்துகொள்ள வேண்டிய சரியான புரிதல் என்பதை உறுதிபடுத்திக்கொண்ட பிறகு மற்ற எந்தத் தத்துவங்களை வேண்டுமானாலும் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளலாம். அப்போதுதான் அதில் உள்ள நிறைகுறைகளையும் நம்மால் அடையாளம் காண முடியும்.

புரிதலை உறுதிப்படுத்துவதற்கு முன்பாகவே நமக்குத் தெரிந்த விஷயங்களை ஒப்பிட்டு ஆய்வது என்பது நாம் வளர்த்த ஆடுமாடுகளை கொண்டே நாம் வளர்க்கும் உயர்ந்த வித்தினை அழிப்பதாகும்.

தெரிந்து கொள்வது என்பது வேறு, புரிந்து கொள்வது என்பது வேறு.

தெரிந்து கொள்வது என்பது; இதுவரை நாம் மற்ற மகான்கள் கூறிய மற்றும் சாஸ்திரங்கள் கூறிய தத்துவங்களை எல்லாம் ஒரு கருத்தாகத் தெரிந்து வைத்திருப்பது.

புரிந்துகொள்வது என்பது நிகழ்ந்து கொண்டிருக்கும் உண்மையை, நம் அறிவைக்கொண்டு ஆய்ந்து புரிந்து கொள்வது.

புரிந்துகொண்டு அதை, நாம் சரியான புரிதல் என்று உறுதிபடுத்திக்கொண்டால் அது நமதானதாகிவிடும். நம் வாழ்வுக்கு வழி காட்டும். நமக்கு நாமே ஒளியாவோம்.

தெரிந்து வைத்திருக்கும் அனைத்துக் கருத்துகளும் நமக்கு சொந்தமானதல்ல, இரவல் அறிவு, அவை மாறுதலுக்கு உட்பட்டவை..

அப்படியென்றால் இதுவரை மற்ற மகான்களும் சாஸ்திரங்களும் விடுதலையைப் பற்றி கூறிய தத்துவங்களெல்லாம் உண்மை இல்லையா?

உண்மைதான். ஆனால் அவை அனைத்தும் தாமாக நிகழக்கூடியவை. முக்தி, விடுதலை என்பதெல்லாம் தாமாக நிகழக்கூடியது. அவற்றுக்கு முயற்சி செய்தால் முரண்பாடுகளே தோன்றும். நமது முயற்சி என்ற செயலே தாமாக நிகழும் விடுதலைக்கு தடையாகி விடுகிறது. எந்த ஒன்றைப் புரிந்துகொண்டால் நம் அக முயற்சியை கைவிடுவோமோ, அக சரணாகதி அடைவோமோ அதுவே நாம் புரிந்துகொள்ள வேண்டிய சரியான புரிதல். அதை புரிந்துகொண்டால் போதும் முக்தி என்ற விடுதலை தாமாகவே ஏற்பட்டுவிடும். சாஸ்திரங்கள் கூறும் தத்துவத்தின் அம்சமாகவே நம்மை அறியாமலே மாறிவிடுவோம்.

எனவே திறந்த மனத்துடன் அணுகுவோம். புரிதலை நமதாக்கி கொள்வோம்.

அன்புடன்,

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## ஏற்காடு ஞான முகாமில் கலந்துகொண்டவர்கள் - மே 2014



## சென்னை மைலாப்பூர், நங்கநல்லூர், ICF மற்றும் திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம் மாவட்டத்தில் நடைபெற்ற ஸ்ரீ பகவத் ஐயாவின் சிறப்புரை நிகழ்ச்சியிலிருந்து...



## நெரூரில் 3 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மைய அன்பர்கள் சென்ற ஆண்டைப் போலவே இந்த ஆண்டும் நெரூரில் பகவத் ஐயா அவர்களின் 3 நாள் ஞான முகாம் ஒன்றை ஏற்பாடு செய்துள்ளனர்.

இந்த ஞான முகாம் கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் காவிரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஆன்மிகத்தில் சிறப்பு வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்திற்கு அருகில் நெரூர் அக்ரஹாரத்தில் அமைந்துள்ள காஞ்சி சங்கர மட வளாகத்தில் நடைபெற உள்ளது.

நாள் : 14-11-2014 இரவு 8-00 மணிமுதல் 16-11-2014 மாலை 3-00 மணிவரை

14-11-2014 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப் பின் அறிமுக வகுப்போடு ஞான முகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

அடுத்தநாள் 15-11-2014 அன்று காலை 9-00 மணிமுதலே பகவத் ஐயாவின் வகுப்புகள் தொடங்க உள்ளன. எனவே ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் இரவுக்குள் ஞான முகாம் நடைபெறும் இடத்திற்கு வந்து சேர்ந்திடுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

பெண்கள் தங்குவதற்கென தனி இடவசதி உள்ளது.

வழி : கரூரிலிருந்து திருமுக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல்துறை என்கிற சதாசிவன் கோவில் நிறுத்தத்தில் இறங்க வேண்டும்.

பஸ் நெ. 4 மற்றும் மினி பஸ் வசதி உள்ளது.

கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் இருக்கும் மார்க்கெட் ஸ்டாப் வரை நடந்து சென்று பேருந்தில் ஞான முகாமிற்கு வரலாம்.

நன்கொடை கட்டணம் ரூ.600 (நேரில் வரும் போது செலுத்தலாம்)

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் பெயரை முன்பதிவு செய்துகொள்வது அவசியம்.

முன்பதிவுக்கு :

திரு. ராஜகோபால் - 9360579181
திரு. மோகன் - 9245440575
திரு. சுவாமிநாதன் - 9942289420
திரு. பாலசுப்ரமணியம் - 9787253751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

## 2015 ஆம் ஆண்டு மாத காலண்டர்




2015 ஆம் ஆண்டுக்கான மாத காலண்டர் பகவத் ஐயா அவர்களின் வண்ணப்படங்களுடன் ஞானத் தெளிவைத் தரும் ஐயாவின் வாசகங்களையும் (Enlightenment Quotes) இணைத்து மிகவும் பயன் தரும் வகையில் தயாரித்து டிசம்பர் மாதத்திற்குள் வெளியிட உள்ளோம்.

காலண்டரின் விலை ரூ.100/-.

தாங்கள் வாங்கி பயன் பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக அளித்து அவர்களும் பயன்பெற உதவுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

உங்களுக்கு தேவைப்படும் எண்ணிக்கையை முன் பதிவு செய்வது அவசியம்.

முன்பதிவிற்கான இறுதி தேதி : 25-10-2014.

தேவைப்படும் எண்ணிக்கையில் மட்டுமே அச்சடிக்கப்படுவதால் முன்பதிவு செய்பவர்களுக்கு மட்டுமே வழங்கப்படும்.

<u>பணம் அனுப்பும் வழிகள் :</u>

- Credit Card or Debit Card மூலமாக www.pravaagam.org என்ற இணையதளத்தின் மூலமாக செலுத்தலாம்.
- "Pravaagam Publications" என்ற பெயருக்கு Cheque (or) D.D. (or) M.O, அனுப்ப வேண்டிய முகவரி :
  பிரவாகம் பப்ளிகேஷன்ஸ், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636003.

<u>நேரடியாக Bank A/c ல் செலுத்தபவர்கள் :</u>

- HDFC Bank A/c. No.15908730000243 "Pravaagam Publications" IFSC : HDFC0001590 என்ற கணக்கு எண்ணில் செலுத்திவிட்டு 9789165555 என்ற எண்ணுக்கு பணம் செலுத்திய விபரத்தையும் முகவரியையும் SMS செய்யவும்



**ஓஷோ-வின் பார்வையில் " ஞானமும் விடுதலையும்"**
**கட்டுரைத் தொடர் நவம்பர் மாதம் முதல் வெளிவர உள்ளது.**



## "குருவின் கருணை"

ஜென்கதை

ஜென் குரு ஒருவர் இருந்தார். அவரிடம் ஆன்ம பலம் நிரம்பியிருந்தது. அதனால் அவரைச் சுற்றி எப்போதும் பேரமைதி நிலவியது. அவர் கருணை மிக்கவராக இருந்தார்.

அவரிடம் உபதேசம் பெற்ற பலர் ஞானத்தெளிவு அடைந்திருந்தனர். தினசரி அவரைக் கண்டு உபதேசம் பெறுவதற்காக பலர் வருவது வழக்கம். ஒருநாள் பலர் அங்கு வந்த சமயத்தில் அவர்களிடம் திருடன் ஒருவன் திருடிவிட்டான். அப்படித் திருடிய சமயத்தில் அவன் பிடிபட்டுவிட்டான்.

இந்தச் சேதி குருவின் காதிலும் காற்றுவாக்கில் சென்று விழுந்தது. அவர் கொஞ்சமும் அதைப் பொருட்படுத்தவில்லை. இதனால் சீடர்கள் ஏமாற்றமடைந்தார்கள். வேறொரு முறையும் அவன் பிடிப்பட்டான். இப்போது சீடர்களே சென்று குருவிடம் செய்தியைச் சொன்னார்கள்.

குரு "சரி, திருடுவது தவறு என்பது தெரியாமல் அறியாமையால் செய்திருப்பான். அடுத்த முறை திருடினால் பார்த்துக்கொள்ளலாம்" என்றார். அப்படிச் சொன்னதோடு சரி. அதற்குப் பிறகு அவன் திருடியும் அதுபற்றி எந்தவொரு நடவடிக்கையும் எடுக்கவில்லை.

சீடர்களுக்கு இதனால் கடும்கோபம். அடுத்தமுறை இவன் பிடிபடட்டும் இரண்டில் ஒன்று பார்த்துவிடலாம் என்று தங்களுக்குள் பேசி முடிவு செய்து கொண்டார்கள்.

அதுமுதல் அவனைக் கண் கொத்திப்பாம்பாக கவனித்து வந்தார்கள். இம்முறை வெகு சீக்கிரத்திலேயே அவனைப் பிடித்துவிட்டனர். ஒரு சிறு திருட்டு செய்தபோது அவனைக் கையும் களவுமாகப் பிடித்து குருவிடம் அழைத்து சென்றனர்.

சீடர்கள் குருவை பார்த்து, "குருவே இப்போதும் இவன் திருடிவிட்டான், நாங்கள் கையும் களவுமாகப் பிடித்துவிட்டோம், இவனைத் தண்டித்து வெளியே துரத்தவேண்டும்" என்றனர்.

குரு திருடனைப்பார்த்து கேட்டார், "நீ திருடினாயா?"

திருடன் "இல்லை" என்று பொய் சொல்லி மறுத்தான். திருடன் பொய் சொல்லியதைக் கேட்டு அருகில் இருந்த சீடர்களில் ஒருவன் மிகுந்த கோபம் அடைந்தான்.

"திருடியதோடு இல்லாமல் பொய்யும் சொல்லுகிறான். இவனை விடக்கூடாது குருவே, கண்டிப்பாகத் தண்டிக்க வேண்டும்" என்று ஆவேசப்பட்டான்.

குரு மிக அமைதியாக, "இவன் பொய் சொல்லுகிறான் என்று உனக்கு எப்படித் தெரியும்?" எனக் கேட்டார். உடனே சீடன், "இவன் திருடியதை நானே பார்த்தேன், திருடிய பொருளை அவன் சட்டைப்பையில் வைத்துள்ளான்" எனக் கூறினான்.

குரு, "இவன் பாவம், பொய்யைக் கூட சரியாக சொல்லத்தெரியாதவனாக இருக்கிறான், இவன் சொல்வது பொய் என்று தெளிவாகத் தெரிகிறது, அந்த அளவுக்கு கூட விபரமற்றவனாக இருக்கிறான். மிகவும் பரிதாபத்திற்கு உரியவன். இவனை இங்கிருந்து துரத்தினால் இவன் எங்கு செல்லமுடியும்", எனக் கருணையோடு கேட்டார்.

உடனே சீடர்கள் அனைவரும் மிகுந்த சினத்துடன் "குருவே ஒன்று இவனைத் தண்டித்து இந்த இடத்தைவிட்டே நீங்கள் துரத்தவேண்டும், இல்லை என்றால் நாங்கள் எல்லோரும் இங்கிருந்து போய்விடுவோம்" என்றனர்.

"போங்கள்" என்றார் குரு அமைதியாக. இந்தப்பதிலைக் கேட்டுத் திகைத்துப்போன சீடர்களை நோக்கி குரு "அப்பா! நீங்கள் எல்லாம் கற்றுக்கொண்டு விட்டீர்கள். இனி உங்களுக்கு குரு என்று ஒருவர் தேவையில்லை. ஆனால் இவன் கல்வி இன்னும் முடியவில்லை. இவனுக்கு ஒரு குரு தேவை. நீங்கள் அனைவரும் அவனை ஒரு குற்றவாளியாக பார்க்கிறீர்கள். ஆனால் அவன் எனக்கு ஒரு நோயாளியாகத்தான் தெரிகிறான். ஒரு நோயாளியை நோயோடு வெளியே அனுப்ப எனக்கு மனம் வரவில்லை. அவனுக்கு தற்போது என்னுடைய அன்பும் அரவணைப்பு என்ற மருந்தும் தேவைப்படுகிறது. அவனை குணப்படுத்தாமல் வெளியே அனுப்பமுடியாது. அவனை இங்கேயே தங்கவைத்து முழுவதுமாக குணமாக்கிய பிறகே வெளியே அனுப்புவதுதான் சரி. நீங்கள் இருப்பதும் போவதும் உங்கள் விருப்பம். உங்களை விடவும் அவன்தான் இப்போது எனக்கு முக்கியம்" என்றார்.

திருடியவன் கதறியபடி வந்து குருவின் காலைத்தொட்டான்.

ஜென் கதை - "குருவின் கருணை"




**Book packet** containing printed books

**Periodical**

*If undelivered please return to:*



Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555